(b) the Corporation took out on hire, three portable hot-mix plants from the Highways Department of the Government during the period December 1960 to March 1961 for effecting urgent repairs to the City roads due to the heavy rains in November 1960.

*Hospital (Kamayakavundanpatti)*

* 1839 Q.—SRI M. D. THIAGARAJA PILLAI (on behalf of SRI N. R. THIAGARAJAN) : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா காமயகவுண்டன்பட்டி ஆஸ்பத்திரிக்கு எத்தனை நாளாக டாக்டர் இல்லை ?

(இ) அங்கு டாக்டர் நியமிக்காத காரணமென்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) The rural dispensary at the place is under the control of the Madurai District Board and it was without a medical practitioner from 3rd August 1957 to 16th June 1961.

(b) The District Board could not get a practitioner for appointment in the dispensary.

*Dhobi and Barber Communities*

* 1840 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Works be pleased to state—

(a) the pattern of assistance to be given to persons belonging to Dhobi and Barber Communities; and

(b) the amount allotted for each district for the year 1961–62 for this purpose?

THE HON. SRI P. KAKKAN : (a) & (b) Barber and Dhobi Communities have been included in the list of most Backward Classes and are eligible for the concessions allowed to these classes. The Member seems to refer to the scheme for the grant of loans to the backward and eligible community people engaged in hair dressing, laundrying or tailoring for establishing their business. This scheme was tried as an experimental measure in Salem district during 1960–61. The pattern of assistance to be adopted during 1961–62 and the amounts to be set apart for each district are under consideration.

SRI K. VINAYAKAM : Is it not a fact that these Barber and Dhobi Community boys, even though ranked as the most backward community, enjoys the same facilities as are now being enjoyed by the Scheduled Caste boys?

THE HON. SRI P. KAKKAN : Only in the matter of educational concessions.

26th September 1961]

SRI M. KALYANASUNDARAM : நான் கல்விச் சலுகைகளைப் பற்றி குறிப்பிடவில்லை. அவர்கள் தொழில் நடத்துவதற்காகக் கொடுக்கப்படும் உதவியைப் பற்றி நான் குறிப்பிடுகிறேன். பரீட்சார்த்தமாக சேலம் ஜில்லாவில் நடத்துவதாகச் சொன்னார்கள். எவ்வளவு தொகை செலவழிக்கப்படுகிறது ? என்னென்ன உதவிகள் செய்யப்படுகின்றன. அதே உதவிகளை எல்லா ஜில்லாக்களிலும் கொடுப்பதற்கு நடவடிக்கை எப்பொழுது எடுக்கப்படும். ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது சேலம் ஜில்லாவில் பரீட்சார்த்தமாக சாமான்கள் வாங்கிக்கொடுத்துப் பார்த்தோம். ரூ. 41,000 செலவில் 50 பேர்களுக்கு கொடுக்கப்பட்டது. இன்னும் பல பேர்களுக்குக் கொடுக்கவில்லையாதலால் அவர்கள் அதிருப்தி அடைகிறார்கள். ஒவ்வொரு ஜில்லாவிலும் குறைந்தது 100 பேர்களுக்கு சாமான்கள் வாங்கிக்கொடுக்க வேண்டும் என்று யோசனை செய்து பரிசீலனை செய்துகொண்டிருக்கிறோம். "பார்பர் கம்யூனிடிக்கு". Hair cutting machine, razor, scissors, hair brush, strap, shaving brush, razor stone and comb இவைகளெல்லாம் வாங்கிக்கொடுக்கவேண்டும் ஒவ்வொருவருக்கும் என்று ஏற்பாடு. அதேமாதிரி "டோபி" கம்யூனிடியில் ஒவ்வொருவருக்கும் "அயர்ன் பாக்ஸ்" முக்கியமாகத் தேவை. அதுவும் 100 பேர்களுக்கு ஒவ்வொரு ஜில்லாவிலும் வாங்கிக் கொடுக்கலாம் என்ற யோசனையில் இருக்கிறது.

SRI M. KALYANASUNDARAM : இந்த உதவியானது இந்த ஜாதிக்காரர்களுக்காக அளிக்கப்படுவது மட்டுமல்ல அதிலே இருக்கக் கூடியது. மற்றபடி பொதுமக்களுக்கும் இது நன்மையாக இருக்கும். "பார்பர் இட்ச்சஸ்" போன்ற தொத்து வியாதி வாராமல் இருப்பது அவசியம் என்று நான்கருதுகிறேன். ஆகவே நல்ல கத்திகள் போன்ற அதற்கான பொருள்கள் வாங்கிக்கொடுப்பது அவசியம். அதேபோன்று துணிகளை, தொத்து வியாதிகள் பரவாத முறையில் சலவை செய்து கொடுப்பதற்கு உள்ள வசதிகளைச் செய்து கொடுக்க அரசாங்கம் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது இருக்கும் நிலைமையில் இந்த உதவியைச் செய்வதற்கு அரசாங்கம் பரிசீலனை செய்து ஒரு முடிவுக்கு வரும் என்று நினைக்கிறேன். இதர உதவிகள் அளிப்பது பற்றி பின்னால் தான் யோசிக்கவேண்டும்.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, சலவைத் தொழிலாளர்களும், சிகை அலங்கரிக்கின்ற தொழில் நடத்துகின்ற தோழர்களும் மிகவும் வறியவர்களாக இருப்பதன் காரணமாக, அவர்கள் தங்கள் தொழில் நிலையங்களை கூட்டுறவு முறையில் ஆரம்பிப்பதற்கு உதவி கேட்டால், அதை அளிப்பதற்கு அரசாங்கம் வழி செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : ஏற்கனவே க்ஷவரத் தொழிலாளர்கள் சில இடங்களில் கூட்டுறவு முறையில் தொழில் நடத்திவருகிறார்கள். சில இடங்களில் கோவில்களில் முடி இறக்குவதற்கு கூட்டுறவு முறையில் இந்தத் தொழிலை நடத்துவதற்கு அரசாங்கம் உதவி கொடுத்திருக்கிறது. கூட்டுறவு இயக்கத்தை அபிவிருத்தி செய்யவேண்டுமென்றுதான் அரசாங்கத்தின் நோக்கம். அந்த முறையில் வந்து உதவி கோரினால், அதுபற்றி கவனிக்கப்படும்.

SRI P. G. MANICKAM : ஹரிஜனங்களுக்குள்ளே சலவைத் தொழில் செய்பவர்கள் தனியாக இருக்கிறார்கள். அவர்களுக்கு ஹரிஜன நல இலாகா மூலம் கருவிகள் இலவசமாகக் கொடுக்கப்படுவதில்லை. இனிமேலாவது அவர்களுக்குத் தேவையான பொருள்களை ஹரிஜன நல இலாகா மூலம் வழங்குவதற்கு நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்களுக்கு ஞாபகம் இல்லை என்று நினைக்கிறேன். இப்பொழுது ஹரிஜன சலவைத் தொழிலாளர்களுக்கு சாமான்கள் வழங்கப்படுகிறது.

Sri V. SUBBIAH : குறிப்பாக கிராமப் பகுதிகளிலே சலவைத் தொழிலாளர்களுக்கு "டோபி கானா" போன்றவைகள் அவசியம் கட்டிக் கொடுக்கவேண்டும். கிராமப் பகுதிகளில் இப்பொழுது தண்ணீர் இல்லாமல் அவர்களுக்கு இம்மாதிரி வசதிகள் இல்லாமல் இருக்கிறது. அவர்களுக்கு பணமாகக் கொடுப்பதைவிட, சாமான்களாக வாங்கிக்கொடுப்பது உதவிகரமாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

The Hon. Sri P. KAKKAN : அவர்களுக்கு ரூபாய் கொடுக்காமல், சாமான்களாகத்தான் வாங்கிக்கொடுப்பதற்காக யோசித்துக் கொண்டிருக்கிறோம். பெரிய நகரங்களில் பஞ்சாயத்து போர்டுகள், நகரசபைகள் "டோபி கானா" கட்டுவதற்கு முன்வருகிறபொழுது, அவைகளைக் கவனித்து பரிசீலனை செய்து ஸ்தல ஸ்தாபன இலாகா மூலம் உதவி செய்துகொண்டுவருகிறோம்.

9 a.m. Sri K. B. S. MANI : ஸார், இப்பொழுது மிகச் சிரமப்பட்டுக் கொண்டிருக்கிற சலவை, க்ஷவரத் தொழிலாளிகளுக்கு அரசாங்கம் உதவி செய்தாலும், அவர்கள், முக்கியமாக சலவைத் தொழிலாளிகள், டோபி கானாக்கள் இல்லாத காரணத்தால், ஒவ்வொரு தாலுகா ஹெட்க்வார்ட்டர்ஸிலும், கிராமங்களிலும், துணிகளைத் துவைக்க அவர்கள் மிக்க கஷ்டப்படுகிறார்கள் ; வெகு தூரம் துணிகளைச் சுமந்து செல்ல வேண்டியிருக்கிறது. கோடை காலத்தில் தஞ்சாவூர் ஜில்லா போன்ற பகுதிகளில் தண்ணீர் இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, ஒவ்வொருப் பஞ்சாயத்திலும் டோபி கானாக்கள் அமைக்க சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா ?

The Hon. Sri P. KAKKAN: அந்தந்த கிராமங்களில் உள்ள நிலைமையை அபிவிருத்தி செய்வதற்கென்றுதான் பஞ்சாயத்து யூனியன்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவர்கள் டோபி கானாக்கள் அமைக்க முன்வந்தால், அவர்கள் நல்ல நன்மைகளை அடைவார்கள்.

Sri M. R. KANDASWAMI MUDALIYAR : ஸார், அமைச்சர் தன் பதிலில் எண்ணிக்கைப் பற்றிச் சொன்னார்கள். ஆனால், அவர்களுக்கு உதவிக்காகக் கொடுக்கும் தொகை மிகமிகக் குறைவாக இருக்கிறது ; அதனால், வாங்கிக் கொடுக்கும் கருவிகள் அதிகமாக இருக்கவில்லை. எல்லா ஜில்லாக்களிலும், அதிகப்பட்ட நபர்களுக்கும், அதிகமான தொகையையும் கொடுக்க அடுத்த ஆண்டிலாவது வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க அரசாங்கம் முன்வருமா ?

The Hon. Sri P. KAKKAN : கனம் அங்கத்தினர் அடுத்த ஆண்டில் என்று சொல்கிறார்கள் ; அடுத்த ஆண்டு வரை காத்திருக்கமாட்டோம். இந்த ஆண்டே செய்யலாம். எல்லா ஜில்லாவிலும்தான் உதவிகள் அளிக்கப்படுகின்றன. முதலில் சேலத்தில் பரீட்சாத்தமாகச் செய்தோம், அது திருப்தி அளிக்கவில்லை. ஒவ்வொரு ஜில்லாவிலும் 100 பேருக்கு சாமான்கள் வாங்கிக் கொடுக்க ஏற்பாடு இருக்கிறது.

Sri A. A. RASHEED : ஐயா, நாவிதர்களுக்கு பயிற்சி சாலை ஏற்படுத்தும் உத்தேசம் உண்டா ?

The Hon. Sri P. KAKKAN : அதற்குத் தனிக் கேள்வி போட வேண்டும்.

### *Cement (adulteration)*

* 1841 Q.—Sri V. K. KOTHANDARAMAN : கனம் பொதுமராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில், சிமெண்டில் கலப்படம் செய்வதாக ஏதேனும் புகார்கள் வந்தனவா ?

(இ) என்னென்ன விதமான கலப்படம் ?

(உ) இதைத் தடுக்க என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது ?